ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

## அருணாசல அக்ஷரமணமாலை மாண்பு

பகவான் ரமணர் விரூபாக்ஷ குகையில் (1900-1916) வாசம் செய்த காலத்தில் உடனிருந்த அடியார்கள், தாம் பிக்ஷை எடுக்கச் செல்லும்போது பாட வேண்டிய ஒரு துதிநூலை இயற்றித் தரும்படி கேட்டனர். இதுபற்றி எந்த நினைப்பும் பகவானது மனதில் எழவில்லை. ஆயினும் இறைவன் திருவருளால், ஒருநாள் கிரிவலம் செய்யும்போது ஆங்காங்கே அமர்ந்து, தனக்கும் அருணாசலனுக்கும் ஏகாந்தத்தில் நிகழ்ந்த அதிசயத்தை பக்திப் பரவசத்துடன், கிரிவலம் செய்து முடிப்பதற்குள் 108 மந்திரங்கள் அடங்கிய இத்துதி நூலை பகவான் இயற்றியருளினார். இதற்குப் பொருள் என்ன என்று ஸ்ரீ பகவானிடம் அடியார்கள் கேட்டபோது, அதற்குப் பொருள் அதைப் பாராயணம் செய்வதுதான் என்று விடையருளினார்.

வட இந்திய முகம்மதியப் பேராசிரியர் ஹபிஸ் ஸயத் ஸ்ரீபகவானிடம் ஒருசமயம் வினவியதாவது: "அத்வைதியாகிய (தனக்கு அன்னியமாக ஒன்றுமற்ற) தாங்கள் உங்களுக்கு அன்னியமாய் அருணாசலத்தை உருவகித்துப் பாட எவ்வாறு முடிந்தது?" இக்கேள்விக்கு ஸ்ரீபகவான் கூறியதாவது: "பக்தன், கடவுள், துதி அனைத்துமே பரமான்மாதான். நீங்கள் உங்களை, உங்களுடைய தேகத்துடன் ஐக்கியப்படுத்திக் கொள்ளும்போது, ஒரு பக்தன் தன்னை ஏன் அருணாசலத்துடன் ஐக்கியப்படுத்தி, துதிக்கக் கூடாது?"

ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய

பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிகள் அருளிய

# ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை

பாயிரம்

( விருத்தம்)

தருணா ருணமணி கிரணா வலிநிகர்
தரும் அக்ஷரமண மகிழ்மாலை
தெருள் நாடிய திரு அடியார் தெருமரல்
தெளியப் பரவுதல் பொருளாகக்
கருணா கரமுனி ரமணா ரியன்
உவகையினால் சொலியது கதியாக
அருணாசலம் என அகமே அறிவொடும்
ஆழ்வார் சிவனுலகு ஆள்வாரே

*- முருகனார்*

## காப்பு

அருணாசல வரற்குஏற்ற அக்ஷரமண மாலைசாற்றக்
கருணாகர கணபதியே கரம்அருளிக் காப்பாயே.

## நூல்

அருணா சலசிவ அருணா சலசிவ
அருணா சலசிவ அருணாசலா!
அருணா சலசிவ அருணா சலசிவ
அருணா சலசிவ அருணாசலா!

1. அருணா சலம்என அகமே நினைப்பவர்
அகத்தை வேர் அறுப்பாய் அருணாசலா!

2. அழகு சுந்தரம்போல் அகமும் நீயுமுற்று
அபின்னமாய் இருப்போம் அருணாசலா!

3. அகம்புகுந்து ஈர்த்துஉன் அககுகை சிறையாய்
அமர்வித்தது என்கொல் அருணாசலா!

4. ஆருக்கா எனை ஆண்டனை அகற்றிடில்
அகிலம் பழித்திடும் அருணாசலா!

5. இப்பழி தப்புஉனை ஏன்நினைப் பித்தாய்
இனியார் விடுவார் அருணாசலா!

6. ஈன்றிடும் அன்னையிற் பெரிதருள் புரிவோய்
இதுவோ உனதருள் அருணாசலா!

7. உனையே மாற்றி ஓடாது உளத்தின்மேல்
உறுதியாய் இருப்பாய் அருணாசலா!

8. ஊர்சுற்றும் உளம்விடாது உனைக்கண்டு அடங்கிட
உன்னழகைக் காட்டு அருணாசலா!

9. எனையழித்து இப்போது எனைக்கலவா விடில்
இதுவோ ஆண்மை அருணாசலா!

10. ஏன்இந்த உறக்கம் எனைப்பிறர் இழுக்க
இதுஉனக்கு அழகோ அருணாசலா!

11. ஐம்புலக் கள்வர் அகத்தினிற் புகும்போது
அகத்தினில்நீ இலையோ அருணாசலா!

12. ஒருவனாம் உன்னை ஒளித்தெவர் வருவார்
உன்சூதே இது அருணாசலா!

13. ஓங்காரப் பொருள் ஒப்புயர்வு இல்லோய்
உனையார் அறிவார் அருணாசலா!

14. ஔவைபோல் எனக்குன் அருளைத் தந்துஎனை
ஆளுவது உன்கடன் அருணாசலா!

15. கண்ணுக்குக் கண்ணாய்க் கண்இன்றிக்காண்உனைக்
காணுவது எவர்பார் அருணாசலா!

16. காந்தம் இரும்புபோல் கவர்ந்துஎனை விடாமல்
கலந்தெனோடு இருப்பாய் அருணாசலா!

17. கிரிஉரு ஆகிய கிருபைக் கடலே
கிருபைகூர்ந்து அருளுவாய் அருணாசலா!

18. கீழ்மேல் எங்கும் கிளர்ஒளி மணியென்
கீழ்மையைப் பாழ்செய் அருணாசலா!

19. குற்றமுற்று அறுத்தெனைக் குணமாய்ப்பணித்தாள்
குருஉருவாய் ஒளிர் அருணாசலா!

20. கூர்வாட் கண்ணியர் கொடுமையிற் படாதருள்
கூர்ந்துஎனைச் சேர்ந்தருள் அருணாசலா!

21. கெஞ்சியும் வஞ்சியாய்க் கொஞ்சமும்இரங்கிலை
அஞ்சல்என்றே அருள் அருணாசலா!

22. கேளாது அளிக்கும்உன் கேடுஇல் புகழைக்
கேடுசெய்யாது அருள் அருணாசலா!

23. கையினிற் கனிஉன் மெய்ரசம் கொண்டுஉவகை
வெறி கொளவருள் அருணாசலா!

24. கொடியிட்டு அடியரைக் கொல்லுனைக் கட்டிக்
கொண்டுஎங்ஙன் வாழ்வேன் அருணாசலா!

25. கோபம்இல் குணத்தோய் குறியாய் எனைக்கொளக்
குறைஎன் செய்தேன் அருணாசலா!

26. கௌதமர் போற்றும் கருணைமா மலையே
கடைக்கணித்து ஆள்வாய் அருணாசலா!

27. சகலமும் விழுங்கும் கதிரொளி இனமன
சலசம் அலர்த்தியிடு அருணாசலா!

28. சாப்பாடு உன்னைச் சார்ந்து உணவாயான்
சாந்தமாய்ப் போவன் அருணாசலா!

29. சித்தங் குளிரக்கதிர் அத்தம்வைத்து அமுத
வாயைத்திற அருண்மதி அருணாசலா!

30. சீரை அழித்து நிர்வாணமாச் செய்துஅருள்
சீரை அளித்தருள் அருணாசலா!

31. சுகக்கடல் பொங்கச் சொல்லுணர்வு அடங்கச்
சும்மா பொருந்திடுஅங்கு அருணாசலா!

32. சூதுசெய்து என்னைச் சோதியாது இனிஉன்
சோதி உருக்காட்டு அருணாசலா!

33. செப்படி வித்தைகற்று இப்படி மயக்குவிட்டு
உருப்படு வித்தைகாட்டு அருணாசலா!

34. சேராய் எனின்மெய் நீராய் உருகிக்கண்
நீராற்று அழிவேன் அருணாசலா!

35. சைஎனத் தள்ளில் செய்வினை சுடும்அலால்
உய்வகை ஏதுஉரை அருணாசலா!

36. சொல்லாது சொலிநீ சொல்லற நில்என்று
சும்மா இருந்தாய் அருணாசலா!

37. சோம்பியாய்ச் சும்மா சுகம்உண்டு உறங்கிடில்
சொல்வேறு என்கதி அருணாசலா!

38. சௌரியங் காட்டினை சழக்குஅற்றது என்றே
சலியாது இருந்தாய் அருணாசலா!

39. ஞமலியில் கேடா நான்என் உறுதியால்
நாடிநின் உறுவேன் அருணாசலா!

40. ஞானம் இல்லாதுஉன் ஆசையாற் தளர்வுஅற
ஞானந் தெரித்தருள் அருணாசலா!

41. ஞிமிறுபோல் நீயும் மலர்ந்திலை என்றே
நேர் நின்றனைஎன் அருணாசலா!

42. தத்துவம் தெரியாது அத்தனை உற்றாய்
தத்துவம் இதுவென் அருணாசலா!

43. தானே தானே தத்துவம் இதனைத்
தானே காட்டுவாய் அருணாசலா!

44. திரும்பி அகந்தனைத் தினம் அகக் கண்காண்
தெரியும் என்றனைஎன் அருணாசலா!

45. தீரம்இல் அகத்தில் தேடிஉந்தனை யான்
திரும்பஉற்றேன் அருள் அருணாசலா!

46. துப்பறிவு இல்லா இப்பிறப்பு என்பயன்
ஒப்பிட வாயேன் அருணாசலா!

47. தூய்மன மொழியர் தோயும்உன் மெய்அகம்
தோயவே அருள்என் அருணாசலா!

48. தெய்வமென்று உன்னைச் சாரவே என்னைச்
சேர ஒழித்தாய் அருணாசலா!

49. தேடாது உற்றநல் திருவருள் நிதிஅகத்
தியக்கம் தீர்த்துஅருள் அருணாசலா!

50. தைரியமோடும் உன் மெய்யகம் நாடயான்
தட்டழிந்தேன் அருள் அருணாசலா!

51. தொட்டுஅருள் கைமெய் கட்டிடாய் எனில்யான்
நட்டமாவேன் அருள் அருணாசலா!

52. தோடம்இல் நீஅகத்தோடு ஒன்றி என்றும்
சந்தோடம்ஒன்றிட அருள் அருணாசலா!

53. நகைக்குஇடம் இலைநின் நாடிய எனைஅருள்
நகையிட்டுப் பார்நீ அருணாசலா!

54. நாணிலை நாடிட நானாய் ஒன்றிநீ
தாணுவாய் நின்றனை அருணாசலா!

55. நின்எரி எரித்தெனை நீறு ஆக்கிடுமுன்
நின்அருள் மழைபொழி அருணாசலா!

56. நீநான் அறப்புலி நிதம்களி மயமாய்
நின்றிடு நிலைஅருள் அருணாசலா!

57. நுண்ணுரு உனையான் விண்ணுரு நண்ணிட
எண்அலை இறுமென்று அருணாசலா!

58. நூலறிவு அறியாப் பேதையன் என்தன்
மால்அறிவு அறுத்தருள் அருணாசலா!

59. நெக்குநெக்கு உருகியான் புக்கிட உனைப்புகல்
நக்கனா நின்றனை அருணாசலா!

60. நேசம்இல் எனக்குஉன் ஆசையைக் காட்டிநீ
மோசம் செயாதுஅருள் அருணாசலா!

61. நைந்துஅழி கனியால் நலன்இலை பதத்தில்
நாடிஉட் கொள்நலம் அருணாசலா!

62. நொந்திடாது உன்தனைத்தந்துஎனைக்கொண்டிலை
அந்தகன் நீஎனக்கு அருணாசலா!

63. நோக்கியே கருதிமெய் தாக்கியே பக்குவம்
ஆக்கிநீ ஆண்டருள் அருணாசலா!

64. பற்றிமால் விடம்தலை உற்றுஇறு முனம்அருள்
பற்றிட அருள்புரி அருணாசலா!

65. பார்த்தருள் மால்அறப் பார்த்திலை எனின்அருள்
பார்உனக்கு ஆர்சொல்வர் அருணாசலா!

66. பித்துவிட்டு உனைநேர் பித்தன்ஆக்கினைஅருள்
பித்தம் தெளிமருந்து அருணாசலா!

67. பீதிஇல் உனைச்சார் பீதியில் எனைச்சேர்
பீதிஉன் தனக்குஏன் அருணாசலா!

68. புல்லறிவு ஏதுஉரை நல்லறிவு ஏதுஉரை
புல்லிடவே அருள் அருணாசலா!

69. பூமண மாமனம் பூரண மணம்கொளப்
பூரண மணம்அருள் அருணாசலா!

70. பெயர்நினைத் திடவே பிடித்து இழுத்தனைஉன்
பெருமையார் அறிவார் அருணாசலா!

71. பேய்த்தனம் விடவிடாப் பேயாப் பிடித்துஎனைப்
பேயன் ஆக்கினைஎன் அருணாசலா!

72. பைங்கொடியாய் நான் பற்றின்றி வாடாமல்
பற்றுக் கோடாய்க்கா அருணாசலா!

73. பொடியான் மயக்கிஎன் போதத்தைப் பறித்துஉன்
போதத்தைக் காட்டினை அருணாசலா!

74. போக்கும் வரவும்இல் பொதுவெளியினில் அருட்
போராட்டம் காட்டு அருணாசலா!

75. பௌதிகம் ஆம்உடல் பற்றுஅற்று நாளும் உன்
பவிசுகண்டு உறவருள் அருணாசலா!

76. மலைமருந்து இடநீ மலைத்திடவோ அருள்
மலைமருந்தாய் ஒளிர் அருணாசலா!

77. மானங்கொண்டு உறுபவர் மானத்தை அழித்து
அபிமான மில்லாதுஒளிர் அருணாசலா!

78. மிஞ்சிடில் கெஞ்சிடும் கொஞ்ச அறிவனியான்
வஞ்சியாது அருள்எனை அருணாசலா!

79. மீகாமன் இல்லாமல் மாகாற்று அலைகலம்
ஆகாமல் காத்தருள் அருணாசலா!

80. முடிஅடி காணா முடிவிடுத்து அனைநேர்
முடிவிடக் கடனிலை அருணாசலா!

81. மூக்கிலன் முன்காட்டும் முகுரம் ஆகாதுஎனைத்
தூக்கி அணைந்துஅருள் அருணாசலா!

82. மெய்யகத் தின்மன மென்மலர் அணையில்நாம்
மெய் கலந்திடஅருள் அருணாசலா!

83. மேன்மேல் தாழ்ந்திடும் மெல்லியர்ச் சேர்ந்துநீ
மேன்மை உற்றனைஎன் அருணாசலா!

84. மைமயல் நீத்துஅருள் மையினால் உனதுஉண்
மைவசம் ஆக்கினை அருணாசலா!

85. மொட்டை அடித்தெனை வெட்ட வெளியில்நீ
நட்டம் ஆடினைஎன் அருணாசலா!

86. மோகம் தவிர்த்துஉன் மோகமா வைத்தும்என்
மோகம் தீராய்என் அருணாசலா!

87. மௌனியாய்க் கல்போல் மலராது இருந்தால்
மௌனம் இதுஆமோ அருணாசலா!

88. யவன்என் வாயில் மண்ணினை அட்டி
என்பிழைப்பு ஒழித்தது அருணாசலா!

89. யாரும் அறியாதுஎன் மதியினை மருட்டி
எவர்கொளை கொண்டது அருணாசலா!

90. ரமணன்என்று உரைத்தேன் ரோசம்கொளாதுஎனை
ரமித்திடச் செயவா அருணாசலா!

91. ராப்பகல் இல்லா வெறுவெளி வீட்டில்
ரமித்திடு வோம்வா அருணாசலா!

92. லட்சியம் வைத்துஅருள் அஸ்திரம் விட்டுஎனைப்
பட்சித்தாய் பிராணனோடு அருணாசலா!

93. லாபநீ இகபர லாபம்இல் எனைஉற்று
லாபம்என் உற்றனை அருணாசலா!

94. வரும்படி சொலிலை வந்துஎன் படிஅள
வருந்திடுஉன் தலைவிதி அருணாசலா!

95. வாவென்று அகம்புக்குஉன் வாழ்வுஅருள்அன்றேஎன்
வாழ்வுஇழந்தேன் அருள் அருணாசலா!

96. விட்டிடில் கட்டமாம் விட்டிடாது உனைஉயிர்
விட்டிட அருள்புரி அருணாசலா!

97. வீடுவிட்டு ஈர்த்துஉள வீடுபுக்குப் பையஉன்
வீடுகாட்டினை அருள் அருணாசலா!

98. வெளிவிட்டேன் உன்செயல் வெறுத்திடாது உன்அருள்
வெளிவிட்டு எனைக்கா அருணாசலா!

99. வேதாந்தத்தே வேறுஅற விளங்கும்
வேதப் பொருள்அருள் அருணாசலா!

100. வைதலை வாழ்த்தா வைத்துஅருட் குடியா
வைத்துஎனை விடாதுஅருள் அருணாசலா!

101. அம்புவில் ஆலிபோல் அன்புஉரு உனில்எனை
அன்பாக் கரைத்துஅருள் அருணாசலா!

102. அருணைஎன்று எண்ணயான் அருள்கண்ணிபட்டேன்உன்
அருள்வலை தப்புமோ அருணாசலா!

103. சிந்தித்து அருள்படச் சிலந்திபோல் கட்டிச்
சிறையிட்டு உண்டனை அருணாசலா!

104. அன்பொடுஉன் நாமம்கேள் அன்பர்தம் அன்பருக்கு
அன்பன் ஆயிடஅருள் அருணாசலா!

105.என்போலும் தீனரை இன்புறக் காத்துநீ
எந்நாளும் வாழ்ந்துஅருள் அருணாசலா!

106.என்புருகு அன்பர்தம் இன்சொற்கொள்செவியும்என்
புன்மொழி கொளஅருள் அருணாசலா!

107.பொறுமையாம் பூதர புன்சொலை நன்சொலாப்
பொறுத்துஅருள் இஷ்டம்பின் அருணாசலா!

108.மாலை அளித்து அருணாசல ரமணஎன்
மாலை அணிந்துஅருள் அருணாசலா!

அருணா சலசிவ அருணா சலசிவ
அருணா சலசிவ அருணாசலா!

அருணா சலசிவ அருணா சலசிவ
அருணா சலசிவ அருணாசலா!

அருணாசலம் வாழி அன்பர்களும் வாழி
அக்ஷர மணமாலை வாழி.

# தியானப் பாட்டு

கண்ணை மூடி அமர்ந்துகொள்  கடவுள்என்று நினைந்துகொள்
எண்ணிடாமல் எதையுமே  இறைவன் ஒன்றே நினைந்துகொள்
காணும் உலகை நினைப்பதால்  கடவுள் நினைவு போய்விடும்
வேணும் உறுதி முதலிலே  விரும்பித் தியானம் பண்ணுவாய்
எந்த வடிவில் கருதினும்  அந்த வடிவில் தோன்றுவார்
சொந்த வடிவம் பெயரிலார்  சுத்த மோன சின்மயம்
இன்பமான ஒருபொருள்  இருக்கு உன்றன் நெஞ்சிலே
அன்பு கொண்டு தேடினால்  அளவில்லாத சுகமடீ.
எங்கும் உள்ள கடவுளை  இதய குகையில் காணலாம்
இங்க கண்ட  பிறகுதான் இருப்ப தெல்லாம் அவன்மயம்
எண்ணம் அறியும் சாக்ஷியாய்  இறைவன் உன்னுள் இருக்கிறார்
எண்ணம் ஓய்ந்த இடத்திலே  இறைவன் வந்து தோன்றுவார்
எண்ணம் ஓய வழியைக்கேள்  இறைவன் ரமணன் மொழியைக் கேள்
எண்ணம் எழும்பும் தருணமே  யாருக்கு எழுவது என்றுபார்
எண்ணம் தனக்கே யெழுவதால்  இந்த "நானார்" என்றுபார்
எண்ணும் தன்னை நோக்கவே  எழுந்த எண்ணம் ஓய்ந்துபோம்
பார்க்கப் பார்க்க உன்னுளே  பரமஞானம் பூக்குமே
பார்க்கும் அறிவைப் பார்க்கவே  பழகிப் பழகி வெற்றிகொள்
கற்கும் கல்வி பலவிலும்  கடவுள் கல்வி முதலிடம்
நற்சிறப்பு யாவிலும்  ஞான நிஸ்டை முதலிடம்
உடல் எடுத்த நோக்கமே  உண்மை இன்பம் துய்க்கவே
கடவுள் ஆகி நின்றுடல்  சுழற்றி வீசி போகலாம்
தெய்வம் என்பது அருள்மயம்  ஜெகம்எல்லாம் இருள்மயம்
மெய் எதென்று நாடவே  விளங்கும் இந்த உண்மையே
வாழ்க ரமண சற்குரு  வாழ்க ஞான மார்க்கமே
வாழ்க ஆன்ம சாந்தியில்  வாழும் வாழ்வு வாழ்கவே!

## இறைவனின் கருணை

பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியிடம் ஒருவர் இறைவன் கருணை உள்ளவரா எனக் கேட்டார்."ஆம்"பதில் வந்தது. "எல்லார் மீதும் பொழிவாரா?" "ஆம்"- பதில்.பின் ஏன் எனக்கு மட்டும் இறைவனின் கருணை கிடைக்கவில்லை? ரமணரிடமிருந்து உடனே பதில் வந்தது. “நீதான் உன் பாத்திரத்தைக் கவிழ்த்து வைத்திருக்கிறாயே? பின் எப்படி இறைவனின் கருணை மழை உனக்குக் கிடைக்கும்?”.

பாத்திரம் என்பது மனம். அது தூய்மையானதாக இருக்க வேண்டும்.

**- பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி**

---

உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால் எப்பொழுதும்
உன்னைக்கண்டு எல்லாமும் உன்னுருவாய் - அன்னியமில்
அன்புசெயும் அன்னோன் அருணாசலா வெல்கும்
இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே.

- பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி,

*அருணாசல பஞ்சரத்னம்-5*

---

அருணாசல அக்ஷரமணமாலை பாடலை ராகத்தில் பாட ஆடியோ வடிவில் 99656 22878 இந்த whatsapp நம்பரில் SRI RAMANA என்று தகவல் அனுப்பி பெற்றுக்கொள்ளலாம்.

இப்புத்தகம் தேவைக்கு:

**ஸ்ரீ அருணாசல அக்ஷரமணமாலை சேவை மையம்**

20/12.E,புது வீதி, கடலைக்காரர் வீதி,

கோட்டூர் - மலையாண்டிபட்டினம் (PO) பொள்ளாச்சி தாலுக்கா - 642114,

கைபேசி : 99656 22878,8778660345

e.mail : ramanadhason@gmail.com

